[11th August 1960

**SRI V. SUBBIAH :** நமது ராஜ்யத்திலே ஜமீன்தாரி ஒழிப்பிற்குப் பிறகு பல கிராமங்கள் குறிப்பிட்ட தாலுகாவிலிருந்து 40 மைல் தூரத்தில் இருக்கின்றன. அவற்றைச் சமீபத்தில் உள்ள தாலுகாவுடன் இணைக்க என்ன திட்டம் இருக்கிறது ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இந்தக் கேள்வி வட ஆற்காடு மாவட்டத்தைப் பொருத்தது. கனம் அங்கத்தினர் பொதுவாகக் கேட்பதால் தனியாகக் கேட்டால் பதில் அளிக்க முடியும்.

*Ship-building yard at Tuticorin*

* 92. *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கொழும்பு திட்டப்படி, பிரிட்டனிலிருந்து வந்த நிபுணர் கோஷ்டி தூத்துக்குடி கப்பல் கட்டத் தகுதியான இடம் என்று சிபாரிசு செய்தார்களா ?

(ஆ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** (அ) No, Sir.

(ஆ) Does not arise.

*Figures of leaders on the postage stamps*

* 93. *Q.*—**SRI P. G. MANICKAM :** கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தபால் தலைகளிலே எந்தெந்தப் பெரியோர்களின் உருவங்களை வெளியிடப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள் ?

(ஆ) எந்தெந்த பெரியோர்களுடைய உருவப் படங்களை வெளியிட சர்க்கார் சம்மதித்திருக்கிறார்கள் ?

(இ) 1960-61-ம் வருஷத்திலே மத்திய சர்க்காரால் புதிதாக வெளியிடப்போகும் தபால் தலைகளிலே சென்னை சர்க்காரால் தெரிவிக்கபட்டிருக்கும் பெரியோர்களுடைய உருவங்கள் அச்சிடப்படுமா ?

**THE HON. SRI V. RAMAIAH :** (*a*) No recommendation has been made in this regard by this Government to the Central Government.

(*b*) & (*c*) Do not arise.

**SRI P. G. MANICKAM :** சென்ற வருஷம் நமது சென்னை அரசாங்கம் முயற்சி எடுத்ததன் காரணமாகத் திருவள்ளுவர் படமானது தபால் தலைகளில் பொறிக்கப்பட்டது. இந்த ஆண்டிலும் அதே போல் நம்முடைய நாட்டிலுள்ள பெரியோர்களின் படங்